# வேறுபகல்

வெளித் திண்ணையில் தீப்பெட்டிகள் காய்ந்து கொண்டிருந்தன. பசை உலர்ந்துபோன பலகையும் நீலத் தாள்களும் அப்படியே இருந்தன. அவள் உட்கார்ந்து ஒட்டிய இடத்தில் ஓரச்சுவரில் சாய்ந்த எண்ணெய்த் தலைப் பிசுக்கிருந்தது. முருங்கை மரத்தடியில் பூக்கள் உதிர்ந்து கிடந்தன. பகலின் உஷ்ணம் விரிந்திருந்தது.

அவள் பாத்திரங்களை பொறுக்கிக்கொண்டு மரத்தடிக்குப் போனாள். மரத்தடியில் பெரிய சிமெண்ட் தொட்டி இருந்தது. கறுப்புக்கல் ஒன்று ஒரு பக்கம் தூக்கியதாக இருந்தது. கோழி நடந்து, கிண்டிய தடம் மண்புழுவென நெளிந்து கிடந்தது. இரும்பு வாளி துருவேறியிருந்தது.

பாத்திரங்களைப் போட்டுவிட்டு சேலையை ஏற்றிச் சொருகிக் கொண்டு உக்கார்ந்தபோது பார்த்தாள். நாய் படுத்திருந்தது. சாக்கடையின் ஓரம், மரத்தின் நிழல் விழுந்திருந்த இடத்தில் கால்களை அகட்டியபடி கிடந்தது. நாயின் முகம் தரையோடு பதிந்து கிடந்தது.

நாயின் வயிறு பெருத்து சரிந்திருந்தது. பொட்டை நாய். கால்களின் சீரான துடிப்பு இருந்தது. கண்ணை அரை மூடி ஈரம் வழியக் கிடந்தது நாய். அவள் பார்த்துக்கொண்டே இருந்தாள். கொஞ்ச நாள் நாய் தெருவில் அலைந்தபடியே இருக்கும். பின் எப்போதும் இப்படி நித்திய கர்ப்பமாக வீழ்ந்து கிடக்கும். குட்டிகள் என்றாலும் எட்டு, பத்துதான்.

போன தரம் அவர்கள் வீட்டின் பின்புறமிருந்த குட்டிச் சுவரில் ஒதுங்கி குட்டி போட்டிருந்தது. கண் திறக்காத குட்டிகள்

கண்டபடி முட்டிக்கொண்டிருந்தன. குட்டிகளின் நிறங்கள்தான் எத்தனை விநோதமாக இருந்தன. நெற்றியில் மட்டும் கறுப்பு விழுந்த குட்டி, வால் நீண்ட குட்டி, சிவப்பும் பளுப்புமாக. இரண்டு நாள்களுக்கு நாய் இங்குமங்கும் அலைந்தபடியிருந்தது.

அவளை விடவும் அவன் குட்டிகள் கிடந்த இடத்தை தினமும் போய் பார்த்து வந்தான். ஒரு குட்டியை தூக்கிக்கொண்டு வந்து வீட்டில் வளர்ப்பதற்காக வைத்துக்கொண்டான். அவளுக்கு அந்தக் குட்டியை அடியோடு பிடிக்கவில்லை. புசுபுசுவென இருந்தது குட்டி. அதன் சப்தம் குழந்தைகளின் கீச்சுக் குரல் போல இருந்தது. அசூயையாக இருந்தது அது.

இடம் தெரியாமல் எதன் மேலாவது முட்டிக் கீச்சிட்டது நாய்க் குட்டி. அவள் அதைத் தொடவேயில்லை. பாத்திர மூடியில் பால் ஊற்றி வைத்தார்கள் அதற்கு. அவன் வேலை விட்டு வந்ததும் குட்டியைக் கையோடு தூக்கிக்கொண்டு திண்ணைக்கு வருவான். அவன் கழுத்தைப் பிடித்துத் தூக்கும்போது கழுத்துக்குக் கீழே தொங்கும். காதைப் பிடித்து தூக்குவான். கத்தும். சிரித்தபடியே அவளிடம் சொல்வான்.

''ரோசம் ஜாஸ்தியா இருக்கு.''

நாய்க் குட்டிகள் இருக்கும் இடம் ஜனங்களுக்கு எப்படித் தெரியும் எனத் தெரிவதில்லை. தெரிந்து விடுகிறது. பெரும்பாலும் குட்டிகளை ஆள் பார்க்காத நேரத்தில் தூக்கிக்கொண்டு போய் விடுவார்கள்.

பொட்டைக் குட்டிகளையெல்லாம் நாய் இல்லாத நேரம் தோட்டி தூக்கிக்கொண்டு போய் கிணற்றில் போட்டுவிட்டு வருவான். நாய் அலையும். இரவெல்லாம் நாயின் சப்தம் கேட்டபடியிருக்கும். வாயெல்லாம் நீர் வடிய, கண்கள் ஈரம் பரிய நாய் பரண்டும் சப்தம் கேட்கும். விக்கும் தொனியில் அது சப்தமிடும்.

சில நேரம் குட்டிகள் எவர் வீட்டிலிருந்தாவது வெளிப்பட்டு தெருவில் அலையும். அவள் மார்க்கெட் போகும்போது பார்த்திருக்கிறாள். குட்டி நாய் ஓரத்தில் திரியும். மார்க்கெட்டில் இருக்கும் பையன்கள் தூக்கிப் போட்டு விளையாடுவார்கள். அழுகிய பழக் கூடைகளின் மேல் விழும். சப்தமிடும். வாலைச் சுருட்டியபடி ஓடி எதனடியிலாவது பதுங்கும். தேடுவார்கள்.

அவளுக்கு நாய் பிடிப்பதேயில்லை. அவர்கள் வீட்டில் வளரும் 'நாய்க் குட்டி' எப்போதும் தங்குவதேயில்லை. எப்படியாவது இறந்துவிடும். அவன் அப்போதெல்லாம் சொல்வான்:

''சனியன், நம்ம வீட்டுக்குன்னு வருது பாரு... எதுதான் நிக்குது வீட்ல.''

அவள் பதில் சொல்ல மாட்டாள், எதைச் சொல்கிறான் என அவளுக்குத் தெரியும். அவனே பேசுவான்:

''எதப் போட்டாலும் தின்னுட்டு வளர்ற நாய்க இருக்கு. நம்ம வீட்ல பால் ஊத்தி வளத்தாலும் நிக்க மாட்டேங்குது. எதுக்கும் கொடுப்பினை வேணும்பாங்க.''

அவளுக்குப் பிடிக்காவிட்டாலும் கூட நாய்க்குட்டி இறந்துபோன இரவில் அவள் அழுவாள். அவன் பக்கத்தில் படுத்தபடி கேட்பான்:

''யேய் சுப்பு, எதுக்கு அழுகே.''

அவன் இப்படிக் கேட்டதும் அவள் கேவல் சப்தம் அதிகமாகும். அவனே சொல்வான்:

''பிள்ளைக இல்லேனா என்ன. அதுக்குப் போயி அழுதா'' அவள் விம்மும் வரை பார்த்தபடியே இருப்பான். நினைத்துக் கொண்டாற் போல தொண்டை அடைத்துக்கொள்ளும் அவளுக்கு. எல்லாம் ஞாபகம் வரும்.

அவள் கல்யாணமாகி வந்து உண்டானபோது ஆளே மாறி யிருந்தாள். ஆளற்ற வீட்டில் வெயில் இறங்கியபடியிருக்கும். கண்ணாடியை எடுத்து கையில் வைத்துக்கொண்டு முகம் பார்த்தபடியிருப்பாள். முகம் பெரிதாக விரிந்துபோயிருக்கும். மஞ்சள் படர்ந்துபோன முகம். வயிறு உப்பிப் போய் உடம்பே வேறு வடிவம் கொண்டது போல இருக்கும். இரவில் அவன் அவள் கிட்டத்தில் புரளும்போது அவன் முகத்தை அள்ளி வயிற்றோடு அமுக்கிக்கொள்வாள். உள்ளே அசையும்.

அவன் மூச்சுக்காற்று உடம்பெங்கும் பரவும். மூணாவது மாதத்துக்குப் பிறகு மாந்தோப்பு சாமி கும்பிடப் போய் வந்தார்கள். நடக்க சிரமமாக இருந்தது. மாமரங்கள் படர்ந்து போன இடத்தில் அவள் படுத்துக்கொண்டாள் பகலில். இரவில் வீடு திரும்பும்போது கால் வலி எடுத்தது.

தொடைகள் பிளப்பது போல இருந்தது. வலி தாங்க முடியாது இருந்தது. வீட்டில் தலையணையைக் கடித்தபடி அழுதாள். இரவில் குழந்தை கருவிலே சிதைந்து போனது. நாலைந்து நாள்கள் ஆஸ்பத்திரியில் இருந்தாள். திரும்பும்போது வயிறு ஒட்டிப்போயிருந்தது.

வெளுத்துப் போயிருந்தாள். முகம் இறுகிப்போய், நெற்றி யெல்லாம் மேடேறியதாக அவள் படுத்தபடியே இருந்தாள் பகலெல்லாம். இதுபோன்று அதன் பின்பு நாலைந்து தரம் நடந்து போனது. கரு நிற்காமல் நழுவிப்போனது. டாக்டர் அவளிடமே சொல்லிவிட்டார். இனிமேல் கருத்தரித்தால் அவள் இறக்கக் கூடும் என்று.

எப்போதாவது சில நாள் அவனுக்கு ஏக கோபம் வரும். அவளைக் கண்டபடி வைவான். சில நேரம் அவள் வயிற்றைப் பார்க்க முடியாதபடி பெரும் துக்கம் கவ்வும் அவனுக்கு.

பகலில் நாய் எங்கும் போவது கிடையாது. எப்போதாவது சில நேரம் பின் கட்டில் நுழைந்து இருப்பதைத் தின்றுவிட்டு போய்விடும். இல்லாவிட்டால் நாக்கைத் தள்ளியபடி படுத்துக் கிடக்கும். நேற்றுதானோ என்னவோ அவள் பெட்டி வாங்க தீப்பெட்டி ஆபீஸுக்குப் போயிருந்தாள்.

காலையிலே அவன் மீன் வாங்கி வந்தான். பெரிய மீன்கள். உயிருடன் இருந்தது கொண்டு வரும்போது. கையில் எடுத்த வுடன் நழுவி எகிறியது. அவனுக்கு மீன் ரொம்பவும் பிடிக்கும். கொஞ்சம் துண்டுகளை எடுத்துப் பொறித்துவிட்டு மீதம் உள்ளவற்றைக் குழம்பு வைத்தாள். நல்ல காரத்தோடு குழம்பு சிவந்து மணத்தது.

அவன் வெற்று உடம்போடு வெளியே படுத்துக் கிடந்தான். அவள் கேட்டாள் புறப்படும்போது,

''தீப்பெட்டி ஆபீஸ் போயிட்டு வந்து சோறு போடவா, சாப்பிடுறீங்களா இப்ப.''

''போயிட்டு வா.''

கதவை ஒருச்சாய்த்து சாத்திவிட்டுப் போனாள். அவன் வெளியே படுத்துக் கிடந்தான். அவள் பெட்டி வாங்கிக்கொண்டு வரும்

போது வீடு திறந்து கிடந்தது. அவனைக் காணோம். உள்ளே நுழையும்போதே மீன் குழம்பு வாசம் தூக்கியது. அவனாக சாப்பிட்டிருக்கக் கூடுமோ என நினைத்தாள். அடுப்படிக்குள் போனபோது பார்த்தாள்.

மீன் குழம்பு வைத்திருந்த சட்டி உடைந்து கிடந்தது. தரையெங்கும் குழம்பு. மீன் துண்டுகள் பாதி பாதியாகக் கிடந்தன. கிண்ணத்தில் இருந்த பொறியலைக் காணோம். பானை உருண்டு சோறு சிதறியிருந்தது. அவளுக்கு ஆத்திர ஆத்திரமாக வந்தது.

வெளியே பார்த்தாள். நாய் நடந்து போன இடமெங்கும் மீன் குழம்பு ஒட்டிய தடமிருந்தது. மரத்தின் அந்தப் பக்கமிருந்த சுவரோரம் நாய் கிண்ணத்தைக் கவ்வியபடி போய்க் கொண்டிருந்தது. அவள் வெளியே கிடந்த விறகுக் கட்டையை எடுத்துக் கொண்டு ஓடினாள்.

நாய் கொஞ்ச தூரம் ஓடியது. மூச்சிறைக்க நின்று முறைத்தது. அவள் விறகுக் கட்டையைத் தூக்கி எறிந்தாள். நாயின் மேல் படவில்லை. இன்னும் ஆத்திரம் அதிகமானது அவளுக்கு. குனிந்து கீழே கிடந்த கல்லால் அடித்தாள். கத்தியபடி ஓடியது.

தூரத்துக்குப் போன பின்பு உள்ளே வந்தாள். கிண்ணம் நாய் போட்ட இடத்திலே கிடந்தது. தரையைத் துடைத்துவிட்டு, புளியை பாத்திரத்தில் ஊறப்போட்டாள், பானையை நிமிர்த்தி வைத்துவிட்டு அடுப்பைப் பற்ற வைத்தாள்.

அவன் வரும்போது கண்டுகொண்டிருந்தான். சப்தமாகக் கத்தியபடி வந்தான்.

''என்னடி ஆச்சு.''

''உங்களை வீட்ல இருக்கச் சொல்லிட்டுதானே போனேன். எங்க போய் தொலைஞ்சீங்க.''

''முடிவெட்டப் போனேன். நீ பூட்டிட்டுப் போகலயா.'' அவள் பேசவில்லை. அவன் வெளியே எட்டி நாய் தென்படுகிறதா எனப் பார்த்தான். தெரியவில்லை. அவளிடம் கேட்டான்.

''எல்லாத்தையும் தின்னுருச்சா.''

''சட்டி உடைஞ்சுபோச்சு.''

நாய் திரும்பியிருந்தது. அவனுக்கு பசி ஏகமாக இருந்தது. மீன் குழம்புக்காக நாக்கு ஏங்கியது. அவளிடம் கோபமாகக் கேட்டான்:

''என்ன செய்யப் போற.''

''ரசம் வைக்கணும்.''

''ஒரு மயிரும் வேணாம்.''

அவன் வெளியே வந்தபோது நாய் மரத்தடியில் எப்போதும் போல விழுந்து கிடந்தது. சப்தமில்லாமல் பின்புறம் போய் விறகுக் கட்டையால் ஒரு போடு போட்டான். நாய் ஏகமாகக் கத்தியது. வாலை சுருட்டிக்கொண்டு ஓடியது. தெருவில் போகும் சிலர் பார்த்துப் போனார்கள். தூரம் போன பின்பு நின்று குரைத்தது. அவன் சாப்பிடப் போனான்.

அன்று முழுவதும் நாய் வரவில்லை. இன்னும் அவளுக்கு நாயின் மேல் கோபம் தீரவில்லை.

அவள் பாத்திரங்களை கழுவி எடுத்துப் போய் அடுப்படியில் வைத்தாள். எப்போதோ விட்டத்தில் சொருகியிருந்த கருவாட்டுப் பையை எடுத்து மண்டை பிய்த்து தூரப் போட்டாள். நாய் மோப்பம் கண்டது. கதவுகளைத் திறந்து வைத்துவிட்டு பதுங்கிக் கொண்டாள்.

நாய் கொஞ்ச நேரத்துக்குப் பின்பு அசைய முடியாமல் லொங்கியபடி வந்தது. கதவின் பக்கம் வந்தபோது பார்த்துக் கொண்டது. வீடு ஏக அமைதியில் இருந்தது. அது அடுப்படியின் உள்ளே போனது. அவள் ஓடி வந்து வெளியே நின்றுகொண்டு கதவை அடைத்துச் சாத்தினாள்.

நாய் மிரண்டுபோய் கதவின் பக்கம் வந்து முகத்தை மோதியது. கால்களைத் தூக்கி கதவைத் திறக்கப் பார்த்து உறுமியது. அவள் வெளியே நின்றபடி கதவிடுக்கில் தெரியும் நாயின் கண்களை, கால்களைப் பார்த்தாள். நிலை கொள்ளாது தவித்தது நாய்.

நாய் உள்ளே அலைந்தது. பாத்திரங்களை உருட்டியது. ஜன்னல் வழியாகப் பெரிய குத்தியை நுழைத்து நாயை நோக்கி இடித்தாள். விலகிச் சுற்றியது. பெரிதாகக் குரைத்தபடி கதவோடு முட்டியது. இடுக்கில் முகத்தைக் கொடுத்தபடி நின்றது.

குத்தியை வாகாக நுழைத்து நாயை அடித்தாள். வலியில் பெரிதாகக் குரைத்தது, இரைத்தது நாய். கண்கள் ஈரம் ததும்பிப் போயிருந்தது.

அவள் வயிற்றோடு அடித்தாள். நாய் கீழே விழுந்து கால்களை அகட்டிக்கொண்டது. கால்கள் நடுங்கின. கொஞ்ச நேரத்துக்குப் பின்பு கதவை ஒருச்சாய்த்து திறந்துவிட்டு விறகைக் கையில் வைத்துக்கொண்டாள். நாய் பதுங்கி வெளிப்பட்டதும் வயிற்றோடு போட்டாள்.

அன்று இரவெங்கும் நாயின் சப்தம் கேட்டபடி இருந்தது. காலை நாய் பிரசவித்திருந்தது. தோட்டி பார்த்துவிட்டு வந்து சொன்னான்.

''நமக்கு வேலையில்ல. குட்டி செத்தே பிறந்திருக்கு. பளுப்பு கலர்ல இருக்கு பாருங்க ஆச்சி.''

அவள் பார்க்க விரும்பவில்லை. அவனும்கூட நாயைப் பார்க்கவில்லை. ஒரு பகலில் நாய் திரும்பவும் வாசலுக்கு வந்தபோது பார்த்தாள். வயிறு உள்போய் ஒட்டியிருந்தது. அவள் தன் வயிற்றில் கை வைத்துக் கொண்டாள். நாய் அவளை முறைத்தபடி போனது. தெரு ஏக இரைச்சலாக இருந்தது. அவன் இரவு திரும்பும்போது குட்டி நாய் கொண்டு வந்திருந்தான். கேட்டதற்கு அடுத்த தெருவில் கிடைத்தது என்றான். வெள்ளைக் குட்டி கண் திறக்கவில்லை. அவள் குட்டியை தூக்கிக்கொண்டு போனாள். புசுபுசுவென இருந்தது. அசூயை தெரியவில்லை அவளுக்கு அப்போது.